# சிவ சடுத்தல சாரம்
# சிவ யோக இலக்கணம்
# அக்கமாதேவி சிருட்டி



மயிலம் பொம்மபுர ஆதீனம்

5-2

மயிலம் பொம்மபுர ஆதீன வெளியீடு எண்: 51

இந்நூல்

திருக்கயிலாய பரம்பரை மயிலம் பொம்மபுர ஆதீனம்

பத்தொன்பதாம் பட்டம்

அருண்மிகு குருமகா சந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள்**

அவர்களின் அருளாணையின் வண்ணம்

# ஸ்ரீ பாலசித்தர் மகா குருபூஜை

மலராக வெளிவருகின்றது

**04—07—1997**

**மயிலம் பொம்மபுர ஆதீனம்**

5-2

உ

சிவமயம்

ஸ்ரீ பாலசித்த குருவே நம:

ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருவடி வாழ்க.




# சிவசடுத்தல் சாரம்
# சிவயோக இலக்கணம்
# அக்கமாதேவி சிருட்டி

பதிப்பாசிரியர்

குமாரசிவ. இராஜேந்திரன் பி.காம்., பி.எல்.,

திருமடம், மயிலம் — பொம்மபுரம்.

## நூல் குறிப்பு

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | 1. சிவசடுத்தல சாரம்<br>2. சிவயோக இலக்கணம்<br>3. அக்கமாதேவி சிருட்டி |
| ஆசிரியர் | : | — |
| பதிப்பாசிரியர் | : | குமார சிவ. இராஜேந்திரன் பி.காம்., பி.எல்., |
| ஓலைச் சுவடியிலிருந்து படி எடுத்தவர்கள் | : | வித்துவான். வீ. குமாரசாமி அய்யர் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு 04.07.1997 |
| உரிமை மற்றும் வெளியிட்டோர் | : | மயிலம் பொம்மபுர ஆதீனம்,<br>மயிலம் 604 304<br>தொலைபேசி எண்–04147–37223 |
| பொருள் | : | தத்துவம் – வீரசைவம் |
| தாள் | : | 11.6 மைசூர் |
| அளவு | : | கிரவுண் 1/8 |
| எழுத்து | : | 10 புள்ளி |
| பக்கங்கள் | : | 36 |
| விலை | : | 7–00 |
| படிகள் | : | 1000 |
| அச்சிட்டோர் | : | சபாநாயகம் அச்சகம்,<br>73–ஏ, கீழ ரத வீதி,<br>சிதம்பரம் – 608 001<br>தொலை பேசி எண் :-23040 |



மயிலம் பொம்மபுர ஆதீனத் திருமடம்
மயிலத்தில் அமைந்துள்ள
ஸ்ரீ வள்ளி தெய்வயானை உடனுறை
ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி



திருக்கயிலாய பரம்பரை

மயிலம் பொம்மபுர ஆதீனம் - குருமகாசந்நிதானம்

18 - ஆம் பட்டம்

ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள்



திருக்கயிலாய பரம்பரை

மயிலம் பொம்மபுர ஆதீனம், குருமகாசந்நிதானம்

19 - ஆம் பட்டம்

ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள்

முருகன் செந்தமிழ்க் கழகத் தலைவர்

உ

ஸ்ரீ பாலசித்த குரவே நம:

# குருமரபு வாழ்த்து

பரசிவமார் திருக்கயிலைப் பரம்பரையின்
வீரசைவ பரமே காட்டப்
பரனருளால் பொம்மபுரக் கடலுதித்த
சங்கு கன்னப் பால சித்தர்
வரமயிலார் முருகனுப தேசமுடன்
வந்துகுரு வாகி யாண்ட
திரமிகுபேர் சிவஞான பாலயநற்
குருமரபு சிறந்து வாழி.

உ

சிவமயம்

ஸ்ரீ பாலசித்த குருவே நம:

ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருவடி வாழ்க

# பதிப்புரை

சிவ சடுத்தல சாரம், சிவ யோக இலக்கணம் மற்றும் அக்கமா தேவி சிருட்டி என்னும் இந்நூல்கள் வீர சைவ தத்துவங்களை வெளிப்படுத்தும் அரிய நூல்களாகும். சுவடி நிலையிலிருந்த இந்நூல்களில் சிவ யோக இலக்கணம் என்பது மட்டும் வீர சைவ சித்தாந்த சென்ன வீரதேவர் அவர்களால் எழுதப்பெற்றது என்பது அறிய முடிகிறது. இம்முந்நூல்களும் ஓலைச் சுவடியிலிருந்து நமது ஆதீனப் புலவர் அமரர். மேலூர். வித்துவான் வீ. குமாரசாமி அய்யர் அவர்களால் படி எடுக்கப்பெற்று, பதிப்பிக்கவேண்டி, தற்பொழுது அருளாட்சி புரிந்து வரும் மயிலம் பொம்மபுர ஆதீனம் பத்தொன்பதாம் பட்டம் அருண்மிகு குருமகாசந்நிதானம் அவர்களிடம் அளித்தார்கள்.

வீரசைவக் கொள்கைகளை அனைவரும், குறிப்பாக வீர சைவ சமுதாயம் அறிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தில் வீரசைவ நூல்கள் அச்சிடப்பெற வேண்டும் என்பதில் மிகுந்த ஆர்வம் உடைய மயிலம் பொம்மபுர ஆதீனம் குருமகாசந்நிதானம் அவர்கள் சிவ சடுத்தல சாரம், சிவ யோக இலக்கணம் மற்றும் அக்கமா தேவி சிருட்டி என்னும் இம்முந்நூல்களை ஆதீனத்தின் சார்பில் வெளியிடப்பெற வேண்டும் எனத் திருவுளம் கொண்டு, ஆதீன முதற் குரவர் ஸ்ரீ பாலசித்தர் மகா குருபூஜைமலராக 04. 07. 1997 வெள்ளியன்று இந்நூல் வெளியீடு செய்யப் பெறுகிறது.

ஓலைச் சுவடியிலிருந்து படி எடுத்து உதவிய அமரர். மேலூர். வித்துவான், வீ.குமாரசாமி அய்யர் அவர்களுக்கு நம்

ஆதீனத்தின் சார்பாக என்னுடைய நன்றியினை உரிமைப் படுத்துகின்றேன்.

மேலும் இந்நூல் அச்சிடும்போது மெய்ப்புத் தாள் களைத் திருத்தி உதவிய மயிலம் ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரியின் முதல்வர் உள்ளிட்ட பேராசிரியப் பெருமக்களுக்கும், இந்நூல் உருவாக்கத்திற்குப் பல்லாற்றானும் பணி செய்த அன்பர்களுக்கும், வழக்கம் போல் செப்பமுற அச்சிட்டு உதவிய சிதம்பரம் சபாநாயகம் அச்சகத்தாருக்கும் மனம் கனிந்த நன்றியினையும் வாழ்த்துக் களையும் உரித்தாக்குகின்றேன்.

ஆதீனத்தின் அருட்பணிகளுக்கு அடியேனை ஆளாக்கி வரும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள். இந்நூல் பதிப்புப் பணியையும் அளித்து ஆட்கொண்டமைக்கு எனது நன்றியினையும், வணக்கத்தையும் அவர்களின் திருவடி மலர்கட்குக் காணிக்கையாக்குகின்றேன்.

தமிழ் கூறு நல்லுலகமும் குறிப்பாக வீரசைவ சமுதாயமும் இந்நூல்களை ஓதிப் பயன் கொண்டு உய்வார்களாகுக.

அருண்மிகு குருமகா சந்நிதானம் அவர்களின்
திருவுளப்பாங்கின் வண்ணம்

**குமாரசிவ. இராஜேந்திரன்**
பி.காம்., பி.எல்.,
திருமடம், மயிலம் – பொம்மபுரம்.

ஓம்

# சிவ சடுத்தல சாரம்

I ஆசாரலிங்கத்துக்கு அங்கம்-சிவபூமி; பத்தன்-பிர்மா, திரவியம்-கெந்ததிரவியம்; முகம்-சத்தியோஜாதம்; அத்தம்-சுசித்தம்; சத்தி-கிரியாசத்தி; சாதாக்கியம்-கன்ம சாதாக்கியம்; கலை-நிவர்த்திகலை; பத்தி-சற்பத்தி; அர்ப்பிதம்-கெந்தார்ப்பிதம்; பிரசாதம்-கெந்தப்பிரசாதம்.

இந்தப் பதினொரு காரியத்துடனே ஆசாரலிங்கத்துக்கு அர்ப்பிதமாம். இப்பதினொரு காரியத்தையும் அறிந்தவன் ஆசாரலிங்கப் பிரசாதி.

II குருலிங்கத்துக்கு அங்கம்-அப்பு; பத்தன்-விஷ்ணு; திரவியம்-இரசத்திரவியம்; முகம்-வாமமுகம்; அத்தம்-சுபுத்தி அத்தம்; சத்தி-ஞானசத்தி; சாதாக்கியம்-கர்த்திரு சாதாக்கியம்; கலை-பிரதிட்டைகலை; பத்தி-நயிட்டா பத்தி; அர்ப்பிதம்-இரசார்ப்பிதம்; பிரசாதம் இரசப்பிரசாதம்.

இந்தப் பதினொரு காரியத்துடனே குருலிங்கத்துக்கு அர்ப்பிதமாம். இப்பதினொரு காரியத்தையும் அறிந்தவன் குருலிங்கப் பிரசாதி.

III சிவலிங்கத்துக்கு அங்கம்-அக்கினி; பத்தன்-உருத்திரன்; திரவியம்-ரூபத்திரவியம்; முகம்-அகோரமுகம்; அத்தம்-நிராங்கார அத்தம்; சத்தி-இச்சாசத்தி; சாதாக்கியம்-மூர்த்தி சாதாக்கியம்; கலை-வித்தியாகலை; பத்தி-அவதான பத்தி; அர்ப்பிதம்-ரூபார்ப்பிதம்; பிரசாதம்-ரூபப்பிரசாதம்.

இந்தப் பதினொரு காரியத்துடனே சிவலிங்கத்துக்கு அர்ப்பிதமாம். இப்பதினொரு காரியத்தையும் அறிந்தவன் சிவலிங்கப்பிரசாதி.

IV சங்கமலிங்கத்துக்கு அங்கம்–வாயு; பத்தன்–மயேச்சுரன்; திரவியம்–பரிசத்திரவியம்; முகம்–தற்புருடமுகம்; அத்தம்–சுமன அத்தம்; சத்தி–திரோதானசத்தி; சாதாக்கியம்–அமூர்த்தி சாதாக்கியம்; கலை–சாந்திகலை; பத்தி–அநுபவபத்தி; அர்ப்பிதம்–பரிசார்ப்பிதம்; பிரசாதம்–பரிசப்பிரசாதம்.

இந்தப் பதினொரு காரியத்துடனே சங்கமலிங்கத்துக்கு அர்ப்பிதமாம். இப்பதினொரு காரியத்தையும் அறிந்தவன் சங்கமலிங்கப் பிரசாதி.

V பிரசாத லிங்கத்துக்கு அங்கம்–ஆகாயம்; பத்தன்–சதாசிவன்; திரவியம்–சத்த திரவியம்; முகம்–ஈசானமுகம்; அத்தம்–ஞான அத்தம்; சத்தி–பராசத்தி; சாதாக்கியம்–சிவசாதாக்கியம்; கலை–சாந்தியாதீதகலை; பத்தி–ஆனந்த பத்தி; அர்ப்பிதம்–சத்தார்ப்பிதம்; பிரசாதம்–சத்தப்பிரசாதம்.

இந்தப் பதினொரு காரியத்துடனே பிரசாதலிங்கத்துக்கு அர்ப்பிதமாம். இப்பதினொரு காரியத்தையும் அறிந்தவன் பிரசாதலிங்கப்பிரசாதி.

VI மகாலிங்கத்துக்கு அங்கம்–ஆத்மா; பத்தன்–உமாபதி; திரவியம்–அர்ப்பிதத் திரவியம்; முகம்–இருதயமுகம்; அத்தம்–பாவ அத்தம்; சத்தி–மகாசத்தி; சாதாக்கியம்–மகாசாதாக்கியம்; கலை–சாந்தியாதீ தோத்தரைகலை; பத்தி–சமரசபத்தி; அர்ப்பிதம்–அர்ப்பிதார்ப்பிதம்; பிரசாதம்–சப்த பரிச ரூப ரச கெந்தங்களை பொருபட்சமா சமர்ப்பித்துக் கொள்கிறதே அர்ப்பிதப்பிரசாதம்.

இந்தப் பதினொரு காரியத்துடனே மகாலிங்கத்துக்கு ஒருப்பட எல்லாம் அர்ப்பிதமாம். இப்பதினொரு காரியத்தையும் அறிந்தவன் மகாலிங்கப்பிரசாதி

இனி, பத்தனும்-மகேசனும்-அர்ப்பிதப் பிரசாதியும்-பிராணலிங்கியும் அவதானப்பிரசாதி. சரணனும்-அயிக்கியனும்-பரிணாமப் பிரசாதி. இவ்வாறும் அங்கத்தலம்.

இனி, ஆசாரலிங்கம் - குருலிங்கம்-சிவலிங்கம்-சங்கம லிங்கம் - பிரசாதலிங்கம் - மகாலிங்கம் இவையாறும் இலிங்கத்தலம்.

மகாலிங்கத்திலே தோற்றம் அதோமுகம். பிரசாதலிங்கத்திலே தோற்றம் ஈசானமுகம். சங்கமலிங்கத்திலே தோற்றம் தற்புருடமுகம். சிவலிங்கத்திலே தோற்றம் அகோரமுகம். குருலிங்கத்திலே தோற்றம் வாமமுகம். ஆசாரலிங்கத்திலே தோற்றம் சத்தியோஜாதமுகம்.

ஈசானம் படிகநிறம், நடுவீற்றிருக்கும் ஆகாயத்தை நோக்கி நிற்கும். தற்புருட முகம் குங்கும நிறம், கிழக்கு நோக்கி நிற்கும். அகோர முகம் கறுப்பு நிறம், தெற்கு நோக்கி நிற்கும். வாமமுகம் சிகப்பு நிறம்,வடக்கு நோக்கி நிற்கும். சத்தியோஜாத முகம் வெள்ளை நிறம், மேற்கு நோக்கி நிற்கும். அதோமுகம் மஞ்சுராணியாய்க்? கிழ் நோக்கிய முகம், நித்திரை கைக்கொள்ளும். மஞ்சு-வெண்மேகம்.

ஈசான முகமானது இராக முதலாயுள்ள சத்த வாக்கியத்தைக் கேட்கும். தற்புருடமுகமானது பரிச முதலாயுள்ளவற்றையறியும். அகோர முகமானது தீப முதலாயுள்ள ரூபங்களைக் காணும். வாமமுகமானது இரசமுதலாயுள்ள அறுசுவையுங்கொள்ளும். சத்தியோஜாத முகமானது தூப முதலாயுள்ள கெந்தங்களை அறியும்.

ஆசாரலிங்கம் முகத்திலே(மூக்கிலே) நிற்கும். குருலிங்கம் நாவிலே நிற்கும். சிவலிங்கம் கண்ணிலே நிற்கும். சங்கம லிங்கம் அங்கத்திலே நிற்கும். பிரசாதலிங்கம் காதிலே நிற்கும். மகாலிங்கம் இருதயத்திலே நிற்கும்.

இந்த ஆறு இலிங்கமும் இட்டலிங்கம்–பிராணலிங்கம்–பாவலிங்க மென்னும் மூன்று இலிங்கத்திலுந் தோற்றம். இம்மூன்று இலிங்கமும் குரு–லிங்க–சங்கமத்திலே தோற்றம்? இட்டலிங்கத்திலே ஆசாரலிங்கமும் குருலிங்கமும் தோற்றம். பிராணலிங்கத்திலே சிவலிங்கமும் சங்கமலிங்கமும்தோற்றம். பாவலிங்கத்திலே பிரசாதலிங்கமும் மகாலிங்கமும் தோற்றம்.

இட்டலிங்கத்திலே காயார்ப்பிதம்; பிராணலிங்கத்திலே கரணார்ப்பிதம்; பாவலிங்கத்திலே பாவார்ப்பிதம்.

இட்டலிங்கத்திலே ரூபு. பிராணலிங்கத்திலே ருசி. பாவலிங்கத்திலே திருப்தி.

பத்தனுக்கு ஆசாரலிங்கம். மயேச்சுரனுக்கு குருலிங்கம். பிரசாதிக்குச் சிவலிங்கம். பிராணலிங்கிக்குச் சங்கம லிங்கம். சரணனுக்குப் பிரசாதலிங்கம். அயிக்கியனுக்கு மகாலிங்கம்.

இந்தத் தலம் பன்னிரண்டிற்கும் குரு–லிங்க–சங்கம முகுர்த்தம்.

ஆசாரலிங்கமும் குருலிங்கமும் பத்தன் மயேசுரனும் குரு முகுர்த்தம். சிவலிங்கமும் சங்கமலிங்கமமும் பிரசாதி பிராணலிங்கியும் இலிங்க முகுர்த்தம். பிரசாத லிங்கமும் மகாலிங்கமும் சரணன் அயிக்கியனும் சங்கம முகுர்த்தம்.

இந்த குரு லிங்க சங்கமத்திலே அந்தப்பிராண நபிமானஞ் சமர்ப்பித்து மந்திராங்கமாகிய தியாகாங்கம் போகாங்கம் யோகாங்கம்.........

தியாகாங்கத்துக்குச் சீவாத்மா; போகாங்கத்துக்கு அந்தராத்மா; யோகாங்கத்துக்குப் பரமாத்மா. சீவாத்மா விலே இஷ்டலிங்க தாரணை. அந்தராத்மாவிலே பிராண லிங்கதாரணை. பரமாத்மாவிலே பாவலிங்க தாரணை.

ஆசாரலிங்கம் குருலிங்கத்திலே தோற்றம். குருலிங்கம் சிவலிங்கத்திலே தோற்றம். சிவலிங்கம் சங்கமலிங்கத்திலே தோற்றம். சங்கமலிங்கம் பிரசாத லிங்கத்திலே தோற்றம். பிரசாதலிங்கம் மகாலிங்கத்திலே தோற்றம். இந்த ஆறு இலிங்கமும் இஷ்டலிங்கம், பிராணலிங்கம், பாவலிங்கமூன்றி னுந்தோற்றம். இந்த மூன்று இலிங்கமும் குரு–லிங்க–சங்க மத்திலே தோற்றம். குரு–லிங்க–சங்கமம் சுத்தப்பிரசாதம், சித்தப்பிரசாதம், பிரசித்தப் பிரசாதத்திலே தோற்றம். இந்த முப்பிரசாதமும் மகாப்பிரசாதத்திலே தோற்றம். மகாப் பிரசாதம் மகாகுருவிலே தோற்றம். மகாகுருவிலே பிரசாதந் தோற்றம். பிரசாதத்திலே சங்கமம் தோற்றம். சங்கமத்திலே இலிங்கம் தோற்றம். இலிங்கத்திலே குரு தோற்றம்.

ஆகையால் குருவுக்குச் செய்த தோஷம் மகாலிங்கத் திலே தீரும். லிங்கத்துக்குச் செய்த தோஷம் சங்கமத்திலே தீரும். சங்கமத்துக்குச்செய்ததோஷம் தீர்த்தப் பிரசாதத் தினாலே தீரும். தீர்த்தப்பிரசாதத்திற்குச் செய்த தோஷம் எவராலுந் தீராது. ஆகையினால் எல்லாத் தோஷமும் தீர்த்தப்பிரசாதத்தினாலே தீரும்.

குரு லிங்கத்திலே அடக்கம். லிங்கம் சங்கமத்திலே அடக்கம். சங்கமம் பிரசாதத்திலே அடக்கம். பிரசாதம் மகா குருவிலே அடக்கம். மகா குருவானது ஓவியப் பொருள். அப்பொருளுக்கு மேலே ஒரு பொருளுமில்லை. இது வாக்கு மனத்துக் கெட்டாமையால் அதீதவுண்மை என்றவாறு.

சிவ சடுத்தல சாரம் முற்றும்.

ஓம்

வீரசைவ சித்தாந்த சென்ன வீரதேவர் எழுதிவைத்த

# சிவயோக இலக்கணம்

உள்முகப் பிரகாசமான இஷ்டலிங்கத்தைக் குரங்கு நோக்கம் வியாக்கிரம நோக்கம் ஊர்த்தநோக்கம் அதோ நோக்கம் என்கிற நான்குவகையுமில்லாமல் மார்ஜால நோக்கம் மோகினி மகளிர் நோக்கமும்போல நாசிநுனியில் இரண்டு பார்வையும் நிறுத்திப் பார்க்கிற சமநோக்கமே **அனுமிஷ?** நோக்கம். இதன் அனுமிஷ நோக்கத்தினாலே வாயு நிற்கும். அதனால் மனம் நிற்கும். அதனால் அறிவு நிற்கும். அதனால் விந்து தெரிசனமாய் விந்து நிற்கும். அதனால் நாத தெரிசனமாய் மாயையுண்டென்று சொல்லப்படாமனின்றுபோம். இப்படியான அனுமிஷ நோக்கத்தால் அந்த இஷ்டலிங்கத்தைப் பார்க்கில் தாமரை நூலைப் போலவும் சந்திரவிம்பம்போலவும் சூரியவிம்பம் போலவும் தோன்றும் சிற்கலை. அந்தச் சிற்கலையானது நோக்கத்துக்குக் கிரகிப்பதாயது. இதய கமலத்தினது மேலான நாலிதழ்ப்பீடம். அந்த நாலிதழ்ப் பீடத்தின் நடுவில் பிரணவ வடிவமான சோதிலிங்கமாய் விளங்கும். அந்தப் பிரணவலிங்கமானது சரணனது மூலாதாரத்தில் நால் இதழ்க்கமலத்தில் நகாரப்பிரணவமான கர்ணிகா பீடத்தில் ஆசாரலிங்கமாய், சுவாதிட்டான சக்கரத்தில் ஆறிதழ்க் கமலத்தின் மகாரப்பிரணவமான கர்ணிகா பீடத்தில் குருலிங்கமாய், மணிபூரகச் சக்கரத்தில் பத்திதழ்க் கமலத்தில் சிகாரப் பிரணவமான கர்ணிகா பீடத்தில்

சிவலிங்கமாய், அநாகதச் சக்கரத்தில் பன்னிரண்டிதழ்க் கமலத்தில் வகாரப்பிரணவமான கர்ணிகாபீடத்தில் சங்கம லிங்கமாய், விசுத்திச்சக்கரத்தில் பதினாறிதழ்க் கமலத்தில் யகாரப்பிரணவமான கர்ணிகாபீடத்தில் பிரசாதலிங்கமாய், ஆக்ஞா சக்கரத்தில் இரண்டிதழ்க் கமலத்தில் ஓங்காரப் பிரணவமான கர்ணிகாபீடத்தில் மகாலிங்கமாய், இப்படிச் சகுண நிர்க்குண ரூபமாய் விளங்குகிறதைச் சிவஞான சம்பன்னனான நிருவிகற்பத் தியான நோக்கத்தால் பார்த்து பிராணன் அபானன் ஆகிய வாயுக்களென்கிற இரட்டைக் கதவால் மூடின பச்சிமத் துவாரத்தை யகலத்திறந்து ஞானக் கிரியா சத்தி ரூபமான கதவையிட்டுப் பிரமரந்தரத் தினுள்ளே புகுந்து சித்தே அங்கமாய்ச் சிற்கனலிங்கமே பிராணனாய், (நெகிழ்ச்சியின்மை) அவிரள சமரசானந்தத் தினால் தானே தானாகி விளங்குகிற சிவயோகத்தின் விவகாரம் எப்படியென்றால், அந்தப் பிரமரந்தத்தின் நடுவே ஆயிரமிதழ்க்கமலம். அதனடுவே நூறிதழ். அதனடுவே அஞ்சிதழ். அதனடுவே விந்துரூபமாகிய மூன்றிதழ் வடிவ மான மூன்று கோணம். அந்த முக்கோணத்தில் அகார உகார மகார வடிவமான பிரணவபீடம். அந்தப் பிரணவ பீடத்தில் சிற்சத்தி தேசோமண்டலத்தின் நடுவில் அதிசூக்குமமான துவாரமாய் சச்சிதானந்த சலநிறைந்து சிற்ரூபமாயிருக்கும். அந்தச் சித்து ரூபமே சுத்தப்பிரசாதப் பிரணவம். அந்தச் சுத்தப்பிரசாதப் பிரணவம் அகாரம். அர்த்த மாத்திரை சிவாக்ஷரமென்னும் நாதஞ்சுநாதம். மகாரம் நாதரூபமாயிருக்கும். அதுவே ஹகார விந்து. சுவிந்து ரூபமான ரள என்னும் இரண்டு வர்ணமாயிருக்கும். இதில் ளகாரமே அர்த்த மாத்திரை ரூபமான சரீரமாய் ளகாரமாய் ஆயிர அக்கர வடிவாய் ஆயிர இதழிலேயும் விளங்கும். இனி ரகாரமே அர்த்த மாத்திரையாய் நூறிதழி லேயும் விளங்கும். அந்த மகார விந்து ரூபமான

சகாரத்துடனே கூடி ஹகார மெய்க்கினி பீசத்துடனே கூடிப் பஞ்சப்பிரசாத ரூபமாய் அஞ்சிதழிலேயும் விளங்கும். முன் சொன்ன முக்கோணத்தில் மூன்றெழுத்து ரூபமான பிரணவ பீடத்தில் இருக்கின்ற சிற்கூபமே எல்லையில்லாத ஞானம். இதில் சச்சிதானந்தசலமே, எல்லையில்லாத பரமானந்தம். இப்படியான சிற்கூபத்திலிருக்கிற சச்சிதானந்த சலமானது நிஷ்கள பரசிவனுடைய நிரஞ்சனாதீத நிரஞ்சன சூனிய வடிவமான நேத்திரங்களில் சிற்பிந்து, பரவிந்து, அபரவிந்து வடிவான துளிகளாய் நின்று அவை களின் உலகநிமித்தமாய்த் துளிக்கொரு மரமாய் இவை களின் பேதம் முப்பத்தெட்டு மரங்களாய்த் தோன்றின என்றறி. பின்பு அந்தச் சிற்கூபத்தின் சச்சிதானந்த சலமே பொங்கி மேல் வழிந்து அமலோக்கிய தலத்தில் நின்று இடம் வலமான சித்திரநாடி வச்சிரநாடிகளிலே புகுந்து ஞானக் கிரியா சத்தி ரூபமான அங்குஷ்டமிரண்டிலுஞ் சேர்ந்து உபாசக நிமித்தமாய்ப் பாதோதமெண்பித்துக் கொண்டது. பின்பு இந்தப் பாதங்களிரண்டும் ஞானக் கிரியா சத்தி ரூபமான நாத விந்து வடிவாய் விளங்குகின்ற மூலசித்து. அந்த மூலசித்தே அநாதி சரணன். அந்த மூலசித்தில் நின்று தோன்றின மகாலிங்கமே ஆதிலிங்கமாகையால் அநாதி சரணனுடைய பாதோதகமாதிலிங்கத்துக்காமென்று வேதா கமங்கள் சொல்லும். இதில் உதகமே ஆனந்தவடிவு. பாதமே ஞான ஞேய வடிவமான சித்து. அந்தச் சங்கமமே சத்து. முன் சொன்ன ஆனந்தமே சத்தினுடைய சித்தின் விலாசம். ஆகையால், அந்த விலாச ரூபமான சின்னாதத்தைச் சித்தின் வழியாகச் சத்தங்கீகரிகையால் சத்துருவமான சங்கமம், சித்துருவமான லிங்கத்துக்கு ஆனந்த ரூபமான பாதோதகத்தை அர்ப்பிக்க வேண்டியது. இந்த இலக்கண மெல்லாம் சிவனுடைய இலக்கணம். இந்தச் சொரூபத்தைக் குருமுகத்தினாலே யறிந்து சித்தே யங்கமாய்ச் சிற்கன

லிங்கமே பிராணனாய்த் தானே தானாக விளங்குவதே யோக இலக்கணம். இந்தச் சிவயோகம் பரமரகசியம். அனுபவ கெம்மியம். காமிகோத்திராகமம் பிரமாணம். இதற்கு உதாரணம் பிரசன்ன உபநிஷத்து. இந்த வசனம் சகலாகம சிகாமணியில் பிரமாணம் கூடல சங்கமதேவர் அருளிச்செய்தது.

சிவயோக இலக்கணம் முற்றும்.

ஓம்

# அக்கமாதேவி சிருட்டி

ஆதி அநாதி நித்தியா நித்தியத்தை விசாரிக்க அறியாதே ஆதி என்றால் தேகம், அநாதி என்றால் ஆத்மா, நித்தியம் இந்த இரண்டினுள்ளே ஆத்மாவே நித்தியம். அநித்தியத்தை விசாரிக்க அறியாதே தேகமே அநித்திய ரூபமென்றறிந்து குருவை யுபாத்தி பண்ணி குருகாருண்ணியத்தைப் பெற்று அத்தேகத்திலும் ஆத்மாவிலும் இஷ்டப் பிராண பாவ லிங்கங்களைச் சம்பந்தம் செய்து கொண்டு ஞானக் கிரியையினால் ஆசரிக்கவறியாது வாயினாலே பரப்பிர்மம் என்று சொல்கிற வாயுப்பிராணிகள் எதை அறிவார்கள்! அந்தப் பரப்பிர்மத்தின் சம்பந்தத்தை வாயினாலே வெறு அறிவினாலே பரப்பிர்மம் என்று சொல்கிற நிரவயப் பிர்மத்தைக் குறிப்பிட்டு "நான் பிர்மம்" என்று சொல்கிற வாயுப் பிராணிகள் அநித்திய சீவர்கள் எதை அறிவார்கள்! அந்தப் பரப்பிர்மத்தின் இச்சம்பந்தத்தை அந்த நிட்களப் பரப்பிர்மத்தின் சுபாவநிலையை அறியார்களென்பது அர்த்தம்.

அஃதெப்படியென்றால், ஆதியே தேகம். தேகமே ஆதாரம். அநாதியே நிர்த்தேகம். ஆத்மாவே அந்தத் தேகத்துக்குத் தேகியாயிருப்பன். ஆதியே சகளம். தேகமே ஆகார சொரூபம். அநாதியே நிட்கள சொரூபம். ஆத்மாவே நிராகார சொரூபம். ஆதியே சடம். தேகமே அசேதன சொரூபம். ஆத்மாவே சைதன்னிய சொரூபம். ஆதியே காயம். தேகமே பஞ்சபூதமயமானது. அநாதியே பிராணன்.

ஆத்மாவே பஞ்சபூதாதீதனானவன். இந்த இரண்டினுடைய கூட்டத்தைப் பேதித்துத் தேகம் ஆத்மா இந்த இரண்டையும் பேதித்து அதனறியிலும் அநாத்ம ஆத்ம தத்துவத்தின் பேதத்தையறிந்து தானே விசாரித்துப் பார்க்குமிடத்துத் தன்னுடைய சுவானுபவ ஞானத்தினாலே அந்தக் காற்று காற்று விதத்தை அறிந்து பார்க்குமிடத்து ஆதிசம்பந்தமான பூதங்களும் நானல்ல தசவாயுக்களான பிராண – அபான – உதான – வியான – சமான – நாக – கூர்ம – சிறுகா – தேவதத்த – தனஞ்செயன் என்னும் தசவாயுக்களும் நானல்ல. தச இந்திரியங்களான சோத்திரம் – தொக்கு – சட்சு – சிங்குவை – ஆக்கிராணம் – வாக்கு – பாதம் – பாணி – பாயுரு – உபத்தம் என்ற தச இந்திரியங்களும் நானல்ல. அந்தரங்க அஷ்ட மதங்களான சங்கத்திதி – திரினீகிருத – வர்த்தினி – குரோதினி – மோகினி – அதிசாரினி – கெந்தசாரினி – வாசினி என்னும் அந்தர சூரியமதம் ஆத்மா மதம் என்னும் அஷ்ட – மதங்களும் நானல்ல. அரி – சட்வர்க்கங்களான காமக் குரோத லோப மோக மத மாச்சர்யமென்னும் அரிசட்வர்க்கங்களும் நானல்ல. சடூரமிகளான பசி – தாக – சோக – மோக – செனன – மரணமென்னும் சடூரமிகளும் நானல்ல. சட்பிரமைகளான சாதி – வர்ண – ஆச்ரம – குல – கோத்திர – நாமங்களென்னும் சட்பிரமைகளும் நானல்ல. சட்பாவ விகாரங்களான அஸ்த்திதே – சரயதே – விபாணிதே – விவர்த்தே – அபக்ஷதே – வின்சியதே என்னும் சட்பாவ விகாரங்களும் நானல்ல. சட்கர்மங்களான பிருதிவியின் கடினம், அப்புவின் நெகிழ்ச்சி, அக்கினியின் உஷ்ணம், வாயுவின் சலனம், ஆகாசத்தின் பிர்மை, ஆத்மாவின் அகங்காரம் என்னும் சட்கர்மங்களும் நானல்ல. சத்த தாதுக்களான ரசம் – உதிரம் – மாமிசம் – மேதசு – அத்தி – மச்சை சுக்கில மென்னும் சத்த தாதுக்களும் நானல்ல, சத்த விதனங்களான – தனுவிதனம் – மன

விதனம் – தன் விதனம்–இராஜ்ய விதனம்-விசுவ விதனம்– முச்சாக விதனம் – சேவகா விதனம் என்னும் சத்த விதனங்களும் நானல்ல. தனுத் திரயங்களான தூலதனு – சூக்குமதனு – காரணதனு என்னும் தனுத் திரயங்களும் நானல்ல. சீவத்திரயங்களான விசுவன்–தைசதன்-பிராக்ஞன் என்னும் சீவத்திரயங்களும் நானல்ல. மலத்திரயங்களான ஆணவம் - மாயை – கன்மமென்னும் மலத்திரயங்களும் நானல்ல. குணத்திரயங்களான சாத்துவித – ராசத – தாமத மென்னும் குணத்திரயங்களும் நானல்ல. தாபத்திரயங் களான ஆதியாத்மிகம் – ஆதிபௌதிகம் – ஆதிதெய்விகம் என்னும் தாபத்திரயங்களும் நானல்ல. பாவத்திரயங்களான பிரகாசனம் – பிறவர்த்தனம் – மோகன மென்னும் பாவத் திரயங்களும் நானல்ல. அவஸ்தாத் திரயங்களான சாக்கிரம் – சொப்பனம் - சுழுத்தி என்னும் அவஸ்தாத் திரயங்களும் நானல்ல. அந்தக் காரணங்களான மனம் – புத்தி – அகங்காரம் – சித்தமும் நானல்ல. இவை முதலாகக் காணப்பட்டனவெல்லாம் நானல்ல. இவையெல்லாம் என் ஆதீனமாயிருக்கும். இவையெல்லாம் ஆத்ம சைதன்யத்தைப் பிடித்திருக்குமன்றி நான் அவைகளின் ஆதீனத்தனல்வன். ஆத்மா, தேக – இந்திரியங் – கரணங்களிடத்தில் சஞ்சரிக் கிறவன். அஃதெப்படியென்றால், தேகத்தை விட்டிராத – படியாலும் கிராணத்தைவிட்டுக் கந்தத்தை அறியாதபடி – யாலும், சிங்குவை விட்டு சுவை அறியாத படியாலும், நயனத்தை விட்டுப் பார்க்க அறியாத படியாலும், தொக்கை விட்டுப் பரிசிக்க அறியாதபடியாலும் சோத்திரத்தை விட்டுக் கேட்க அறியாதபடியாலும், ஆத்மா தேக இந்திரிய கரணங்களின் வசத்தனென்பது அர்த்தம்.

பின், நான் யாரோவென்னில், துரிய துரியாதீதம் வித்தியா தத்துவம் அதுரியம் ஆத்மதத்து;வம் இருபத்தைந்து ஆதீதமான தத்துவ மீறித் தோன்றுகிற சத்து உண்டான

சித்து ஞான சொரூபனான ஆனந்த சுகமான நித்தியங் கேடில்லாத பரிபூரணம் நிரம்பப்பட்ட வஸ்துவே இந்தப் பஞ்சலக்ஷணத்தையுடைய, பரப்பிர்மமே தன்னுடைய சொரூபமென்றறிய; அப்படியறிந்தவுடன், அநித்தியத்தின் ஆசையை விட்டுத் தேகபந்தத்தைவிட்டு நிராளத்திலே நிசத்தைப் பொருந்த அறியாதே, அதன்றியும், குருவுபதேச இலிங்காங்க சம்பந்த சமரசமில்லாத படியாலே ஞானோதய மில்லை. ஞானோதய மில்லாத படியால் நிசமோக்ஷமில்லை. ஆகையால், பூதசம்பந்தியாயிருக்கையினாலே பஞ்சபூதக் கலப்பினாலே தேகமான இடத்துத் தேகியாயிருக்கை யினாலே இந்தத் தத்துவத்துக்கு முதன்மை எப்படி யென்றால், இந்த ஆத்மா அநாத்ம தத்துவங்களுக்கு முதன்மையாய்த் தோன்றுகிற பரதத்துவத்தின் சொரூபம் எப்படியென்றால், அந்தப் பரப்பிர்மமான அவாங்மன கோசரமான நித்தியம் கேடில்லாத நிராளம் பேதிக்கப்படாத நிரஞ்சன சூனியலிங்கமே நிட்களப் பரப்பிர்ம மென்னு மிடத்தில் நிட்கள லிங்கத்தலமாயிற்று. தன்னுடைய லீலா விநோதத்தினாலே அந்த நிட்கள் லிங்கமானது (தன்னுடைய விளையாட்டினாலே) நாத பிந்து பிரகாச தேசோ மூர்த்தி யாகி நின்று மகாலிங்கமாயிற்று. அந்த நிட்கள பரப்பிர்மந் தானே நினைத்த நினைவே நிலைகொண்டு சித்தாயிற்று. இந்த மூலசித்தினாலே சின்னாத சிற்பிந்து சிற்கலை யுண்டாயின. மூன்றுஞ் சமரசமான இடத்துப் பிரகாச சொரூப மாயிற்று. அகண்ட கோளாகார தேசோமூர்த்தி யான மஹாலிங்கமாயிற்று.

இந்த மஹாலிங்கமே பஞ்ச சாதாக்கிய மூர்த்தி எண் 'பித்தது. அந்தப் பஞ்ச சாதாக்கிய மூர்த்தியே கன்ம சாதாக்கியம், கர்த்திரு சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், சிவசாதாக்கியம் என்னும் பஞ்ச சாதாக்கியமே பஞ்சலிங்கப் பிரகாசம் எண்பித்தது. கன்ம

சாதாக்கியமே ஆசாரலிங்கப் பிரகாச மெண்பித்தது. கர்த்திரு சாதாக்கியமே குருலிங்கப் பிரகாச மெண்பித்தது. மூர்த்தி சாதாக்கியமே சிவலிங்கப் பிரகாச மெண்பித்தது. அமூர்த்தி சாதாக்கியமே சங்கமலிங்கப் பிரகாச மெண் பித்தது. சிவசாதாக்கியமே பிரசாதலிங்கப் பிரகாச மெண்பித்தது. இந்தப் பஞ்சசாதாக்கியமே பஞ்சலிங்கப் பிரகாச மெண்பித்தன. அந்தப் பஞ்சலிங்கப் பிரகாசமே பஞ்ச முகமெண்பித்தது.

ஆசாரலிங்கப் பிரகாசமே சத்தியோ ஜாதமுக மெண் பித்தது. குருலிங்கப்பிரகாசமே வாமதேவமுகமெண் பித்தது. சிவலிங்கப் பிரகாசமே அகோரமுக மெண்பித்தது. சங்கமலிங்கப் பிரகாசமே தற்புருடமுக மெண்பித்தது. பிரசாதலிங்கப் பிரகாசமே ஈசானமுக மெண்பித்தது. இந்தப் பஞ்சலிங்கப் பிரகாசமே பஞ்சமுக மெண்பித்தது. அந்தப் பஞ்சமுகங்களில் பஞ்சாக்ஷர முண்டாயின.

சத்தியோ ஜாத முகத்திலே நகாரமும், வாமதேவ முகத்திலே மகாரமும், அகோர முகத்திலே சிகரமும், தற்புருட முகத்திலே வகாரமும், ஈசான முகத்திலே யகாரமும், இப்படிப் பஞ்ச முகங்களிலும் பஞ்சாக்ஷரம் உண்டாயின. அந்தப் பஞ்சாக்ஷரத்தினாலே பஞ்சகலை களுண்டாயின.

நகாரத்திலே நிவர்த்திகலை; மகாரத்திலே பிரதிட்டா கலை; சிகாரத்திலே வித்தியாகலை; வகாரத்திலே சாந்தி கலை; யகாரத்திலே சாந்தியாதீதகலை; இப்படிப் பஞ்சாக்ஷரங்களிலே பஞ்சகலைகளுண்டாயின. அந்தப் பஞ்ச கலைகளிலே நான்கு கரணமும் ஞானமும் உண்டாயின.

நிவர்த்தி கலையிலே சித்தம்; பிரதிட்டா கலையிலே புத்தி; வித்தியா கலையிலே அகங்காரம்; சாந்தீ கலையிலே மனம்; சாந்தியாதீத கலையிலே ஞானம்; இப்படிப் பஞ்ச

கலையிலேயும் பஞ்ச் கரணங்களுண்டாயின. அந்தப் பஞ்ச கரணங்களிலும் பஞ்ச தன்மாத்திரைகளுண்டாயின.

சித்தத்திலே மணப்பொருளும், புத்தியிலே இரசமும், அகங் காரத்தில் உருவமும், மனத்தில் பரிசமும், ஞானத்தில் சத்த மும் இப்படிப் பஞ்சகரணங்களில் பஞ்சவிடயமுண்டாயின. அந்தப் பஞ்சதன்மாத்திரைகளிலே பஞ்சபூதம் உண்டாயின.

மணப் பொருளிலே மண், சுவைப் பொருளிலே நீர், ஒளிப்பொருளிலே நெருப்பு, பரிசப் பொருளிலே வாயு, ஓசைப்பொருளிலே ஆகாயம், இந்தப்பஞ்ச விடயங்களினாலே யும் பஞ்சபூதம் உண்டாயின. ஆதலினால் பஞ்ச பூதங்களே பஞ்சீகரித்து ஐந்துகரணம், ஐந்துவாயு, ஐந்து ஞானேந் திரியம், ஐந்து விடயங்கள், ஐந்து கன்மேந்திரியங்கள் ஆக இருபத்தைந்து தத்துவமுங்கூடி சிவாத்மாவிற்கு அங்க மாயின. ஆதலினாலே அங்கத்தலமாயிற்று.

அந்த அங்கத்துக்கு ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன் மேந்திரியங்கள் ஐந்தும் பிரத்தியாங்க மெண்பித்தது. அந்தச் சரீரத்திற்குத் தச இந்திரியங்களே அவயவங்களெண்பித்தது. இப்படித் தேக சம்பந்தத்தை, இப்படித் தேக இந்திரியங் கரணங்களைச் சிவன் தன்னுடைய சிவாங்கிசனான ஆத்மா விற்குச் சமபத்தித் தாரகையினாலே பரசிவன் தன்னுடைய அங்கிசபூதமான ஆத்மாவுக்குக் காட்டினானென்பதுவே சம்சாரத்தலமாயிற்று.

அப்படிச் சம்பந்தமான ஆத்மாவிற்குத் தோற்றுவித்த காயத்தின் பூர்வாசிரைய முதல் தோற்றம் எங்கேயாயிற்று? எங்குத் தோன்றிற்று? எதனால் எனக்குச் சம்பந்தமாயிற்று? சிவாக்ஞையினால் தனக்குத் தேக சம்பந்தமாயிற்று என்றறிந்த இடத்துப் பிண்டத்தலமாயிற்று.

எதிரி இஷ்டந் தன்னிஷ்டமென்றதுபோல அந்த இருபத்தைந்து தத்துவத்தையும் பஞ்ச பூதத்திலடக்கி,

பஞ்சபூதங்களையும் பஞ்சவிடயங்களிலடக்கி, அந்தப் பஞ்ச விடயங்களையும் பஞ்ச கரணங்களிலடக்கி, அந்தப் பஞ்சக் கரணங்களையும் பஞ்சகலைகளிலடக்கி, அந்தப் பஞ்ச கலைகளையும் பஞ்சாக்ஷரத்திலடக்கி, அந்தப் பஞ்சாக்ஷரங் களையும் பஞ்ச முகத்திலடக்கி, அந்தப் பஞ்ச முகங்களையும் அந்தப் பஞ்சலிங்கப் பிரகாசத்திலடக்கி. அந்தப் பஞ்சலிங்கப் பிரகாசத்தையும் பஞ்ச சாதாக்கியங்களிலேயடக்கி, அந்தப் பஞ்ச சாதாக்கியங்களையும் மஹாலிங்கத்திலேயடக்கி, அந்த மஹாலிங்க சொரூபமே தானென்றறிந்து தன்னி டத்திலே தோன்றின சம்சாரத்தைத் தன்னுடைய விவேகத் தினாலே நிவர்த்தி பண்ணினதே **சம்சார நீக்கத்தலம்**.

அந்தக் காயத்தின் பூர்வாசிரயம் அழிந்து அந்தத் தேக சம்சாரத்தை. பிரபஞ்சத்தை அநித்தியமென்றறிந்து விட்டு, குருவைத் தேடுகையினால் சிவன்றான் குருவாய் வந்து மஹாகனலிங்கத்தை வேதித்துக் கொடுத்தார். வேத–மந்திர–கிரியா தீக்ஷையினால் தூல–சூக்கும–காரணத்தனுத் திரயங்களிலே இட்ட–பிராண–பாவமென்னும் இலிங்கத் திரயங்களைச் சம்பந்தித்துக் கொடுத்தாரென்னுமிடத்துக் **குருகாருண்யத்தலமாயிற்று**.

அந்த மஹாகனலிங்கத்தை வேதித்துக் கொடுத்த கிரமம் எப்படியென்றால், சடுத்தல மார்க்கத்தை அறிவித்தா ரென்னுமிடத்து **இலிங்கதாரணத்தலமாயிற்று**.

ஆத்மாசேரப் பஞ்சபூதங்களே சடாங்கமெண்பித்தன. ஆத்மா முதலாகப் பஞ்சபூதத்தின் பிருதிவி முதலாக அறுவித பூதங்களைப் பத்தன் முதலாக அயிக்கியன் ஈறாக ஆறங்கமெண்பித்தன. அந்த ஆறுவித அங்கத்துக்குக் கலைகளையே நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதை, சாந்தியாதீதோத்தரை என்னும் அறுவித கலைகளையும் அறுவித சத்திகள் எண்பித்தன.

பத்தனுக்கு நிவிர்த்திகலையென்னும் பரியாய நாமத்தை யுடைய கிரியாசத்தி எண்பித்தது. மஹேஸ்வரனுக்குப் பிரதிட்டாகலையென்னும் பரியாய நாமத்தையுடைய ஞான சத்தி எண்பித்தது. பிரசாதிக்கு வித்தியா கலையென்னும் பரியாய நாமத்தையுடைய இச்சா சத்தி எண்பித்தது. பிராணலிங்கிக்குச் **சாந்திகலை யென்னும் பரியாய** நாமத்தை யுடைய ஆதிசத்தி எண்பித்தது. சரணனுக்குச் சாந்தியா தீதை என்னும் பரியாய நாமத்தையுடைய பராசத்தி எண்பித்தது. அயிக்கியனுக்குச் சாந்தியாதீதொத்தரை யென்னும் பரியாய நாமத்தையுடைய சிற்சத்தி எண்பித்தது. இப்படி அறுவகைப் பத்தர்களுக்கும் அறுவித கலைகளையும் அறுவித சத்திகள் எண்பித்தன். அறுவித பத்திகளையும் அளவிடுத்துக் கிரியாசத்தி முதலாகச் சிற்சத்தியந்தமான அறுவித சத்திகளும் அறுவித பத்திகளையும் அளவிடுத்துக் கிரியாசத்திக்குச் சற்பத்தியளவிடுத்து, இச்சா சத்திக்கு அவதானபத்தியளவிடுத்து, ஆதிசத்திக்கு அனுபவபத்தி அளவிடுத்துப் பராசத்திக்கு ஆனந்த பத்தி அளவிடுத்து, சிற்சத்திக்குச் சமரசபத்தி யளவிடுத்து அந்தப் பத்திகளுக்குச் சற்பத்தி முதலாகச் சமரச பத்தியந்தமான அறுவித பத்தி களுக்கும் பாவம்–சற்பாவம்–சுஞ்ஞானம் சுமனம்-நிராங் காரம்–சுபுத்தி–சுசித்தம் என்னும் அறுவித அத்தங்கள் எண்பித்தன.

சமரசபத்திக்குச் சற்பாவமே அத்தம்; ஆனந்த பத்திக்குச் சுஞ்ஞானமே அத்தம்; அனுபவ பத்திக்குச் சுமனமே அத்தம்; அவதான பத்திக்கு நிராங்காரமே அத்தம்; நயிஷ்டா பத்திக்குச் சுபுத்தியே அத்தம்; சற்பத்திக்குச் சுசித்தமே அத்தம்.

இப்படி அறுவித பத்திகளுக்கும் அறுவித கரணங்களே அறுவித அத்தங்களாயெண்பித்தன. அந்த அத்தங்களுக்குச்

சுசித்தமுதலான அறுவித அத்தங்களுக்கு மகாலிங்க முதலான அறுவித லிங்கமெண்பித்தன.

சுசித்த அத்தத்துக்கு ஆசாரலிங்கம். சுபுத்தி அத்தத்துக்குக் குருலிங்கம். நிராங்கார அத்தத்துக்குச் சிவலிங்கம். சுமன அத்தத்துக்குச் சங்கமலிங்கம். சுஞ்ஞான அத்தத்துக்குப் பிரசாதலிங்கம். சற்பாவ அத்தத்துக்கு மஹாலிங்கம். இப்படி அறுவித அத்தங்களுக்கும் அறுவித லிங்கங்களை யறிவித்து அந்த அறுவித லிங்கங்களுக்குச் சடாக்கரத்தையே மந்திரங்களெண்பித்தன.

நகார மந்திரமூர்த்தியே நம என்று ஆசாரலிங்கத்தை நினைக்கிறதற்கு நகாரமே மந்திரம். மகார மூர்த்தியே நம என்று குருலிங்கத்தை நினைக்கிறதற்கு மகாரமே மந்திரம். சிகார மந்திர மூர்த்தியே நம என்று சிவலிங்கத்தை நினைக்கிறதற்குச் சிகாரமே மந்திரம். வகார மந்திர மூர்த்தியே நம என்று சங்கமலிங்கத்தை நினைக்கிறதற்கு வகாரமே மந்திரம். யகார மந்திர மூர்த்தியே நம என்று பிரசாதலிங்கத்தை நினைக்கிறதற்கு யகாரமே மந்திரம். ஓங்கார மந்திரமூர்த்தியே நம என்று மஹாலிங்கத்தை நினைக்கிறதற்கு ஓங்காரமே மந்திரம் இப்படி அறுவித லிங்கங்களையும் நினைக்கிறதற்கு அறுவித அட்சரங்களே மந்திரமென்று அறிவித்தது. அந்த மந்திரங்களுக்கு இருதய முதலான பஞ்சேந்திரியங்களே அறுவித முகங்களெண் பித்தன. நகார மந்திர சொரூபமான ஆசாரலிங்கத்துக்கு கிராணேந்திரியமே முகம். மகார மந்திர சொரூபமான குரு லிங்கத்துக்கு சிங்கு இந்திரியமே முகம். சிகார மந்திர சொரூபமான சிவலிங்கத்துக்குச் சக்ஷு இந்திரியமே முகம். வகார மந்திர சொரூபமான சங்கமலிங்கத்துக்குத் தொக்கிந்திரியமே முகம். யகார மந்திர சொரூபமான பிரசாதலிங்கத்துக்குத் சுரோத்திர இந்திரியமே முகம் ஓங்கார மந்திர சொரூபமான மஹாலிங்கத்துக்கு இருதயமே

முகம். இப்படி அறுவித லிங்கங்களுக்கு அறுவித இந்திரியங் களையே அறுவித முகங்களெண்பித்தன.

அந்த முகங்களே தன்மாத்திரைகளே திரவிய பதார்த்தங்களெண்பித்தன. அந்தக் கிராணேந்திரிய முதலான அறுவித முகங்களுக்கு அறுவித விடயங்களே யோக்கியமான பதார்த்தங்களெண்பித்தன. கிராணேந்தி ரியத்துக்குக் கெந்தமே பதார்த்தம். சிங்நு வேந்திரியத்துக்கு இரசமே பதார்த்தம். நேத்திரேந்திரியத்துக்கு ரூபமே பதார்த்தம். தொக்கிந்திரியத்துக்குப் பரிசமே பதார்த்தம். சுரோத்திரேந்திரியத்திற்குச் சத்தமே பதார்த்தம். இருதயத் திற்குத் திருப்தியே பதார்த்தம். இப்படி அறுவித முகங் களுக்கும் அறுவித விடயங்களே பதார்த்த மென்றறிந்தது. அந்தத் திரவிய பதார்த்தங்களையே அறுவிதவிடய பதார்த்தங்களையும் அந்தந்த முகத்தின் லிங்கங்களிலே அந்தச் சடேந்திரிய முகத்திலே சம்பந்தமான அறுவித லிங்கங்களிலேயும் நிரந்தரம் எப்போதும் சாவதானத் தினாலே அர்ப்பிதமாய் பிருதிவியங்கமான பத்தன் கிரியா சத்தியினாலே சற்பத்தியைப் பொருந்திச் சுசித்த அத்தத் தினாலே நகார மந்திரத்தினாலே ஆசாரலிங்கத்துக்குக் கிராண முகத்திலே கெந்தபதார்த்தத்தை அர்ப்பித்து அந்தக் கெந்தப் பிரசாதத்தைப் புசித்திருப்பான்,

அப்பு அங்கமான மயேஸ்வரன் ஞானசத்தியினாலே நைஷ்டிகா பத்தியைப் பொருந்திச் சுபுத்தி அத்தத்தினாலே மகாரமந்திரத்தினாலே குருலிங்கத்திற்குச் சிங்நுவேந்திரிய முகத்தில் அந்த இரசபதார்த்தத்தை அர்ப்பித்து அந்த இரச பதார்த்தத்தைப் புசித்திருப்பான்.

அக்கினியங்கமான பிரசாதி இச்சாசத்தியினாலே அவதானபத்தியைப் பொருந்தி நிராங்காரமான அத்தத் தினாலே சிவலிங்கத்துக்குச் சிகார மந்திரத்தினாலே

நேத்திரேந்திரிய முகத்தில் ரூப பதார்த்தத்தை அர்ப்பித்து அந்த ரூபப் பிரசாதத்தைப் புசித்திருப்பன்.

வாயு அங்கமான பிராணலிங்கி ஆதிசத்தியினாலே அனுபவ பத்தியைப் பொருந்திச் சுமன அத்தத்தினாலே சங்கமலிங்கத்துக்கு வகார மந்திரத்தினாலே தொக்கிந்திரிய முகத்திலே பரிச பதார்த்தத்தை அர்ப்பித்து அந்தப் பரிச பதார்த்தத்தைப் புசித்திருப்பன்.

ஆகாய அங்கமான சரணன் பராசத்தியினாலே ஆனந்த பத்தியைப் பொருந்தி சுஞ்ஞான அத்தத்தினாலே பிரசாத லிங்கத்திற்கு யகார மந்திரத்தினாலே தொக்கிந்திரிய முகத்திலே சத்த பதார்த்தத்தை அர்ப்பித்து அந்தச் சத்த பதார்த்தத்தைப் புசித்திருப்பன்.

ஆத்மாவே அங்கமான அயிக்கியன் சிற்சத்தியினாலே சமரச பத்தியைப் பொருந்திச் சற்பாவ அத்தத்தினாலே மஹாலிங்கத்திற்கு ஓங்கார மந்திரத்தினாலே இருதய முகத்திலே திருப்தி பதார்த்தத்தை அர்ப்பித்து அந்தப் பரிணாமப் பிரசாதத்தைப் புசித்திருப்பன்.

இப்படிச் சமர்ப்பிதமாய் முடிந்ததன் பிறகு ஆசரணை யடங்கிப் பொருந்தப்பட்ட படியினாலே. அங்கத்தலங் களடங்கிப் பத்தன், மயேஸ்வரன் என்னும் இரண்டு தலமும் தியாகாங்கத் திலடங்கி, பிரசாதி, பிராணலிங்கி என்னும் இரண்டு தலமும் போகாங்கத்திலடங்கி, சரணன் அயிக்கியன் என்னும் இரண்டு தலமும் யோகாங்கத்திலடங்கி, ஆசாரலிங்கம் குருலிங்கம் இரண்டும் இஷ்டலிங்கத் திலடங்கி சிவலிங்கம் சங்கமலிங்கம் இரண்டும் பிராணலிங்கத்திலடங்கி, பிரசாதலிங்கம் மஹாலிங்கம் இரண்டும் பாவலிங்கத்தி லடங்கி, இவ்வாறே அறுவித சத்திகளும் திரிவித சத்தியிலடங்கி, அறுவித பத்திகளும் திரிவித பத்தியிலடங்கி, அறுவித அத்தங்களும் திரிவித அத்தங்களிலடங்கி, அறுவித

முகங்களும் திரிவித முகத்திலடங்கி, அறுவித பதார்த்தங் களும் திரிவித பதார்த்தத்திலடங்கி, அறுவித பிரசாதமும் திரிவித பிரசாதத்திலடங்கி, திரிவித லிங்காங்கத்தில் நின்று திரிவித லிங்கத்தலம், திரிவித அங்கத்தலம், திரிவித சத்தி, திரிவித அஸ்தம், திரிவிதமுகம், திரிவித பதார்த்தம், திரிவிதப் பிரசாதம் இப்படி மூன்று தலங்களும் நின்று காயமே குரு. அந்தச் சரணனுடைய அங்கமே குரு. பிராணனே லிங்கம். ஞானமே சங்கமம்.

சுத்தப் பிரசாத அங்கஸ்வருபமான குருவினிடத்திலே குரு பக்தியினாலே தனு பதார்த்தத்தைச் சமர்ப்பித்து அந்தக் குருமுகத்தினாலே வந்ததே **சுத்தப்பிரசாதம்.** லிங்கத்தினிடத்திலே வந்ததே **சித்தப்பிரசாதம்**. பிராண சொருபமான லிங்கத்திற்கு லிங்கபத்தியினாலே மனப் பதார்த்தத்தை அர்ப்பிக்கையால் அந்த லிங்க முகத்திலே வந்ததே **சித்தப்பிரசாதம்**. சங்கமத்தினிடத்திலே வந்ததே பிரசித்தப் பிரசாதம். ஞான சொருபமான சங்கமத்துக்குச் சங்கம பத்தியினாலே தன் பதார்த்தத்தைச் சமர்ப்பிக்கை யால் அந்தச் சங்கம முகத்தினால் வந்ததே **பிரசித்தப் பிரசாதம்**. இந்தத் திரிவிதப் பிரசாதமே ஒன்றாய், சுத்தப் பிரசாதமே தேகத்திலே சித்தப் பிரசாதமே மனத்திலே பிரசித்தப் பிரசாதமே பிராணனிலே சம்பந்தமாயிருக்கும். அதன்றியும் சுத்தப்பிரசாதமே லிங்கத்தின் இருதயத்திலே. சித்தப் பிரசாதமே லிங்கத்தின் கோளகத்திலே. பிரசித்தப் பிரசாதமே லிங்கத்தின் கோமுகத்திலே சம்பந்தமாய் மஹாகன பரிபூரண பிரசாதத்தை அளவிட்ட சரணன் இந்தத் திரிவிதமுங் கொண்டு தோன்றும் இஷ்டமஹாகன லிங்கமே பிராணனாய்த் தானே அங்கமான சரணன் ஞானியல்ல. தானொருத்தனாய் அறிவொன்றாய் லிங்க மொன்றாய் அறிகிற பின்ன ஞானியல்ல. அஞ்ஞானி முதலே யல்ல. அறிகிறதும் அறிவித்துக் கொள்கிறதும் ஒன்றே

யென்பது கருத்து. சூனியனல்ல; தேகேந்திரிய **கரணத்தை** யுடைய சிவனல்ல நீ. தேகேந்திரிய கரணங்களின் தோற்ற மொன்றுமில்லாத நிரவயனான பரமாத்மா முதலேயல்ல. **தேகேந்திரிய கரணங்களிருந்தும் இல்லாதிருப்பன் என்கிறதே** கருத்து. தொஸ்தி யல்ல. அங்கத்தையும் இலிங்கத்தையும் பின்னமிட்டு அர்ச்சிக்கிர தொஸ்தியல்ல. அத்துவித முதலே யல்ல. **கிரியையிலே பேதமும் அறிவிலே அபேதமுமாயிருப்ப னென்கிற கருத்து.** இந்த இரண்டுந் தானேயாய் இந்தப் பிரகாசமான சரணன் தானே லிங்கமாய் தானே அங்கமாய் தானே பத்திக் கிரியாரூபனாய் தன்னைப் பொருளிலே கொடுத்துத் தன்னைத்தானே பூசித்துக் கொள்வன். இது சொல்லின் **ஆனந்தத்தலம்** ஆகத்தலம் பதினாறு.

இதன் தொந்தமிந்த லிங்காங்கத் தலங்களினுடைய உற்பத்தியும் ஒன்றே. இரண்டானதும் இரண்டே. மூன்றானதும் மூன்றே. ஆறானதும் ஆறே. முப்பத் தாறானதும் முப்பத்தாறே. இருநூற்று ஒருபத்தாறானதை யும் ஒடுக்கத்தின் அந்த இருநூற்றொருபத்தாறே முப்பத் தாறிலேயடங்கி அந்த முப்பத்தாறே ஆறிலேயடங்கி, அந்த ஆறே மூன்றிலே யடங்கி அந்த மூன்றே இரண்டிலேயடங்கி, அந்த இரண்டே ஒன்றிலே ஒன்றடங்கி ஒன்றேயான சகல சம்பந்தத்தை சென்ன மல்லிகார்ச்சுன ஐயர் உம்முடைய சரணரே அறிவார்கள்.

**அங்க லிங்கத்தின் கூடுதல் – பிரிதல் – பற்றுதலை சகிலமென்றது. அஷ்டவித சகில சம்பந்தமென்றது.**

அஃதெப்படியென்றால், பத்தன் - ஆசாரலிங்கம் - கிரியா சத்தி – சற்பத்தி – சுசித்த அத்தம் – கிராணமுகம் – கெந்த பதார்த்தம் கெந்தப் பிரசாதம் – இந்த எட்டும் இஷ்ட லிங்கத்தின் பீடத்திலே சம்பந்தம்.

மயேஸ்வரன்–குருலிங்கம் – ஞானசத்தி - நயிஷ்டாபத்தி– சுபுத்தி அத்தம் – சிங்ஙுவேந்திரியமுகம் – இரசபதார்த்தம் – இரசப்பிரசாதம் இந்த எட்டும் இஷ்டலிங்கத்தின் கடித தானத்திலே சம்பந்தம்.

பிரசாதி – சிவலிங்கம் – இச்சாசத்தி – அவதானபத்தி – நிராங்கார சுத்தம் – நேத்திரமுகம் – ரூபபதார்த்தம் – ரூபப்பிரசாதம் இந்த எட்டும் இஷ்டலிங்கத்தின் இருதயத் திலே சம்பந்தம்.

பிராணலிங்கி - சங்கமலிங்கம் – ஆதிசக்தி – அனுபவ பத்தி – சுமன சுத்தம் – தொக்கிந்திரியமுகம் – பரிச பதார்த்தம் – பரிசப் பிரசாதம் இந்த எட்டும் இஷ்ட லிங்கத்தின் கோமுகத்திலே சம்பந்தம்.

சரணன் – பிரசாதலிங்கம் – பராசத்தி - ஆனந்தபத்தி – சுஞ்ஞான சுத்தம் – சுரோத்ந்திரிய முகம் – சத்தப தார்த்தம்-சத்தப்பிரசாதம் இந்த எட்டும் இஷ்டலிங்கத்தின் நாளத்திலே சம்பந்தம்.

அயிக்கியன் – மஹாலிங்கம் – சிற்சத்தி – சமரசபத்தி – சற்பாவ அத்தம் – இருதயமுகம் – திருத்தி பதார்த்தம் – பரிணாமப் பிரசாதம் இந்த எட்டும் இஷ்டலிங்கத்தின் கோளகத்திலே சம்பந்தம்.

அஃதன்றியும் அட்டவித சகிலமும் சத்துச்சித்தானந்தத் திலே யடங்கி, அப்படியடங்கின பேதத்தைச் சிவனுடைய சிதாங்க சொரூபமான சரணனே அறிவாரல்லது மிக்கின பேதாபேதிகளறியார்கள்.

அக்கமாதேவி சிருட்டி முற்றும்.

ஓம்

# ஷடுஸ்தல லிங்க இலக்கணம்

லிங்கத்தில் கூடியிருக்கின்ற சத்தியே கலையென்று பெயர் பெறும்.

பிரமம் (அ) பரசிவத்தலம்

உலக உற்பத்தி காரணமாகத் தன்னுடன் கூடியிருக்கின்ற சத்தியால் இலிங்கமென்றும் அங்கமென்றும் பிரிந்தது.




| | இலிங்கம் | சாதாக்கியம் | சத்தி | கலை | முகம் | திசை | நிறம் | சம்பந்தம் | ஆதாரம் | பீஜாக்ஷரம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| 1 | ஆசாரலிங்கம் | கன்ம சாதாக்கியம் | கிரியா சத்தி | நிவர்த்தி கலை | சத்தியோ ஜாதம் | மேற்கு | வெண்மை | பீடம் | மூலாதாரம் குதஸ்தானம் 4–இதழ் | ந |
| 2 | குருலிங்கம் | கர்த்திரு சாதாக்கியம் | ஞான சத்தி | பிரதிட்டா கலை | வாமதேவம் | வடக்கு | செம்மை | இடை(அ) கடிததானம் | சுவாதிஷ்பானம் குஹ்யஸ்தானம் 6–இதழ் | ம |
| 3 | சிவலிங்கம் | மூர்த்தி சாதாக்கியம் | இச்சா சத்தி | வித்தியா கலை | அகோரம் | தெற்கு | கருமை | வட்டம்(அ) இருதயத்தானம் | மணிபூரகம் நாபிஸ்தானம் 10-இதழ் | சி |
| 4 | சங்கமலிங்கம் | அமூர்த்தி சாதாக்கியம் | திரோதாயி (அ)ஆதிசக்தி | சாந்தி கலை | தற்புருடம் | கிழக்கு | குங்குமம் | கோமுகம் | அநாகதம் இருதயஸ்தானம் 12–இதழ் | வ |
| 5 | பிரசாதலிங்கம் | சிவ சாதாக்கியம் | பராசத்தி | சாந்தியாதீத கலை | ஈசானம் | நடு(அ) ஆகாயம் | படிகம் | நாளம் | விசுத்தி கண்டஸ்தானம் 16 இதழ் | ய |
| 6 | மஹாலிங்கம் | மஹா சாதாக்கியம் | மஹாசத்தி (அ)சிற்சத்தி | சாந்தியாதீ தோத்தரை கலை | அதோமுகம் | கீழ் | சித்திரம் | கோளகம் | ஆக்ஞை புருவஸ்தானம் 2–இதழ் | ஓங்காரம் |

# மயிலம் பொம்மபுர ஆதீன வெளியீடுகள்

| எண் | நூலின் பெயர் | ஆண்டு | விலை |
|---|---|---|---|
| 20. | இட்டலிங்க அபிடேக மாலை (மூலமும்-பழைய உரையும் | 1965 | |
| 21. | காசி வழித்துணை விளக்கம் | 1965 | |
| 22. | ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் நெஞ்சு விடு தூது (மூலமும் – குறிப்புரையும்) | 1966 | |
| 23. | நெடுங்கழி நெடில், குறுங்கழி நெடில் (மூலமும்-உரையும்) | 1967 | |
| 24. | ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் பிள்ளைத் தமிழ் (மூலமும்-உரையும்) | 1968 | |
| 25. | கைத்தல மாலை, சிவ நாம மகிமை (மூலமும் உரையும்) | 1969 | |
| 26. | ஸ்ரீ பசவேசர் பொன் மொழிகள் 1-ஆம் பகுதி | 1987 | 5.00 |
| 27. | ஸ்ரீ பசவேசர் பொன் மொழிகள் 2–ஆம் பகுதி | 1988 | 5.00 |
| 28. | ஸ்ரீ பசவேசர் பொன் மொழிகள் 3 ஆம் பகுதி | 1989 | 5.00 |
| 29. | நிரஞ்சன மாலை (மூலமும்-உரையும்) | 1990 | 10.00 |
| 30. | ஸ்ரீ பசவேசர் பொன் மொழிகள் 4-ஆம் பகுதி | 1990 | 5 00 |
| 31. | ஸ்ரீ பசவேசர் பொன் மொழிகள் 5 ஆம் பகுதி | 1991 | 5.00 |
| 32. | ஸ்ரீ பசவேசர் பொன் மொழிகள் 6–ஆம் பகுதி | 1992 | 5 00 |
| 33. | ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் தாலாட்டு (மூலமும்-உரையும்) | 1992 | 20.00 |
| 34. | ஸ்ரீ பசவேசர் பொன் மொழிகள் 7–ஆம் பகுதி | 1993 | 5 00 |
| 35. | அல்லம பிரபு தேவர் சடுத்தலம் | 1993 | 5.00 |

| | | | |
|---|---|---|---|
| 36. | ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் திருப்பள்ளியெழுச்சி (மூலமும்–உரையும்) | 1993 | 3.00 |
| 37. | சோணசைல மாலை, நால்வர் நான்மணி மாலை, நன்னெறி (மூலம்) | 1993 | 12.00 |
| 38. | இட்டலிங்கப் பெருமான் தோத்திரத் திரட்டு | 1993 | 4.00 |
| 39. | ஸ்ரீ பசவேசர் பொன் மொழிகள் 8-ஆம் பகுதி | 1994 | 5.00 |
| 40 | மிசிர சடுத்தலம் (குறிப்புரை) | 1994 | 4.00 |
| 41. | சோணசைல மாலை நூலாய்வு | 1994 | 22.00 |
| 42. | நால்வர் நான்மணி மாலை ஓர் ஆய்வு | 1994 | 36.00 |
| 43. | திருச்செந்தில் நிரோட்டக யமக அந்தாதி, பழமலை அந்தாதி (மூலமும்-பழைய உரையும்) | 1994 | 23 00 |
| 44. | ஸ்ரீ பசவேசர் பொன் மொழிகள் 9-ஆம் பகுதி | 1995 | 5.00 |
| 45. | ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் நெஞ்சுவிடு தூது | 1995 | 33.00 |
| 46. | பெரியநாயகி அம்மை கலித்துறை (மூலமும்–உரையும்) | 1995 | 15.00 |
| 47. | ஸ்ரீபசவேசர் பொன் மொழிகள் 10-ஆம் பகுதி | 1996 | 5.00 |
| 48. | பரம ரகசிய சடுத்தலம் (மூலமும்-பழைய உரையும்) | 1996 | 18.00 |
| 49. | ஸ்ரீ பிட்சாடன நவமணி மாலை (மூலமும்-உரையும்) | 1996 | 5.00 |
| 50. | ஸ்ரீ பசவேசர் பொன் மொழிகள் 11-ஆம் பகுதி | 1997 | 5.00 |
| 51. | சிவ சடுத்தல சாரம், சிவ யோக இலக்கணம், அக்கமாதேவி சிருட்டி | 1997 | 7.00 |
| 52. | திருவெங்கைக் கலம்பகம் (மூலமும்-உரையும்) | 1997 | |

சிவ சடுத்தல சாரம், சிவயோக இலக்கணம்,
அக்கமாதேவிசிருட்டி

## பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 19 | 10 | நாணல்ல | நானல்ல |
| 20 | 12 | பிறவர்த்தனம் | பிரவர்த்தனம் |
| 20 | 13 | காரணங்களான | கரணங்களான |
| | 17 | ஆதீனத்தனல்வன் | ஆதீனத்தனல்லன் |
| 23 | 1 | பஞ்ச் | பஞ்ச |
| 31 | 14 | சுரோத்ந்திரிய | சுரோத்திரேந்திரிய |
| அட்டவணை | 8-3 | கடிததானம் | கடித்தானம் |